# திருநெல்லை

22

ஆன்மீகத் திங்களிதழ்



ஐய - சித்திரை - 2014 - ஏப்ரல்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய - சித்திரை - 2014 - ஏப்ரல் இதழ் - 22

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :.
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

## திருநெல்லை துதி

நந்தியம் பெருமான் நாளும் துதிக்கும்
நலமிகு வன்னி வனத்துறை நாதன்
நாவலர் பாவலர் நாளும் துதிக்கும்
நறைவெள் ளேற்றன் நல்லறி வீந்து
புந்தியில் ஞானப் பொருளென நின்றோன்
பொன்மலை கயிலைப் புகழ்வரைத் தலைவன்
பொருவிலோன் என்று பூவிலோன் பேசப்
புகழுறு நெல்லைப் பொற்கொடி கேள்வன்
கந்தமார் குழலி கரம்பிடித் தருளக்
காண்பவன் கழனி வனத்துறை வானைக்
கலந்தவள் நெல்லைக் காத்தளிக் கின்ற
காமர்பூங் குழலி கவினிய உலகில்
இந்துவின் நுதலி ஏன்மழைஇல்லை
இதுவோ நின்னருள் என்றுகலங்கி
இரங்கினர் மக்கள் இஃதறிவாயோ
இன்னே மழைதர எழுகநீதாயே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர்
நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

மாதா, குரு, பிதா தெய்வம் போற்றுதலுக்கும் உரிய வணக்கத்திற்கும் உரியவர்கள் வரிசையிலே நான்காவதாக உள்ளது தெய்வம்.

தெய்வம் என்பதற்கு இறைவன், கடவுள் என்ற பெயர்களும் உண்டு. இறைவன் பேராற்றல் கொண்டவன், எங்கும் நிறைந்தவன், எப்போதும் உள்ளவன், அழிவில்லாதவன், உருவம் ஒன்றில்லாதவன். எல்லாப் பொருள்களுக்கும் ஆதராமாக உள்ளுறைபவன் என்று பலபல பண்புகளை, அவனுடைய கல்யாண குணங்களை ஞானிகளும், அறிஞர்களும், இறை அன்பர்களும் கூறுவார்கள். இவை யாவும் ஆன்மீகத்துறையிலே ஆழங்கால் பட்டவர்களும், உயர்மட்ட சாதகர்களும் கூறுகின்ற பண்புகள்.

சாதாரண மக்கள் தெய்வம் என்ற ஒன்று உள்ளது; அது நம் சக்திக்கு அப்பாற்பட்டது; பேராற்றல் கொண்டது என்ற அளவிலே நம்புகிறவர்கள். அவர்கள் துயரத்தை அடைகின்ற காலம் தங்கள் ஆற்றாமையைச் சொல்லி அழும் தாய் மடியாகவே கருதுகிறார்கள். தெய்வத்தை வணங்குவதாலும் வழிபடுவதாலும் நம் துயரங்கள் தீர்ந்து நல்ல வாழ்விற்கு வழிபிறக்கும் என்று கொண்டாடுகிறவர்கள். இப்படிப்பட்ட பொது ஜனங்கள் அறிந்து கொள்ளவும், வழிபடவும், உருவங்கள் சமைக்கப்பட்டன. எதார்த்தமான வழிகளிலே வழிபடுவதற்கு இந்த உருவ வழிபாடு அல்லது விக்ரக வழிபாடு ஆதாரமாக அமைந்து பக்தியை வளர்க்க உதவுகிறது.

பசுவின் உடலிலே பால் எங்கும் பரந்து பரவியிருந்தாலும்,பசுவின் மடி வழியாகத்தான் அது வெளிப்படமுடியும். அதுபோல எங்கும் நிறைந்திருக்கும் இறைபொருள் சாதாரண மக்களுக்குக் கருணை

பொழிகின்ற வாயில் நம்முடைய கோவில்கள் மற்றும் அதன் உள்ளே அமைந்திருக்கும் இறைவனும், இறைவியும்.

நம்முடைய வாழ்க்கையிலேயே தெய்வத்திற்கு ஈடாக நாம் வணங்கும் முன்னோர்கள்/ நம் காவல் தெய்வம்/ குலதெய்வம்/ இஷ்ட தெய்வம்/ முதன்மைத் தெய்வம் என நாள்முறை வழிபாடுகள் செய்து வருவது இயல்பானவை.

முன்னோர்களுக்குப் படைப்பது, அவர்கள் நினைவு தினங்களிலே பிதுர்க்காரியங்கள் செய்து அவர்களுடைய அருளாசியைப் பெறுவது மிக அவசியம்.

அடுத்ததாக ஒவ்வொரு குடும்பத்தாரும் தங்கள் குடும்ப வழக்கப்படி வணங்கி அபிஷேக ஆராதனை செய்தல், பொங்கல் இடுதல், மாவிளக்கு வைத்தல் போன்ற சமர்ப்பணக் காரியங்களைச் செய்து குல தெய்வங்களின் அருளைப் பெறுவது வழக்கம்.

அடுத்ததாக அவரவர்களுக்கு இஷ்டமான தெய்வம், நெருக்கமான தெய்வம், இஷ்ட தெய்வம்-கற்பக வினாயகராகவோ, முருகனாகவோ, மீனாட்சியாகவோ, மங்கள நாதராகவோ, ஆத்மநாதராகவோ, தில்லை நடராஜராகவோ, தில்லைக்காளியாகவோ, சமயபுரம் மாரியம்ம னாகவோ எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். இஷ்ட தெய்வத்தோடு மனம் ஒன்றுதல் எளிதாகவும், இயற்கையாகவும், வரக்கூடும். எனவே ஜெபம், தியானம் போன்றவற்றிற்கு இஷ்ட தெய்வ வழிபாடு வசதியாக அமையும்.

இவை யாவற்றையும் கடந்து முதன்மைத் தெய்வமாக, சிவன் - விஷ்ணு - பிரம்மம் எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். (சைவம்,வைணவம்,வேதாந்தம்) முதன்மைத் தெய்வத்தை வழிபட்டு அவர்கள் அருள்பெறுவதற்குப்பக்தனுக்கு ஒரு பக்குவம் தேவைப்படும்.

அதனை மேலே சொன்ன வழிமுறைப்படி பக்குவத்தைப் பெறலாம்; முதன்மைத் தெய்வத்தைத் தொடர்ந்து வழிபடுகின்ற பக்குவத்தை அடைந்த அன்பர்களுக்கு மேலும் ஆன்மீகத் துறையிலே முன்னேறி வீடுபேறு அடையும் மார்க்கத்தைப் பல ஞான நூல்கள் தெளிவாக உரைக்கின்றன.

உலகில் எழுவகையான பிறப்புகள் உள்ளன. அவை 1. தேவர் 2. மனிதர்கள் 3. நடப்பன 4. ஊர்வன 5. பறப்பன 6. நீந்துவன 7. தாவரங்கள். இவற்றில் மனிதன் ஒருவனே ஆறறிவு படைத்தவன். நல்லவை, கெட்டவை பகிர்ந்து அறியும் தன்மையுடையவன். மனிதனுக்கு மட்டுமே தருமங்களைச் செய்யவேண்டிய கடப்பாடும், வாழ்வதற்கான நெறிமுறைகளைக் கடைபிடிக்க வேண்டிய அவசியம் உண்டு. அவனை மட்டுமே இன்பம், துன்பம், வறுமை, செல்வம் போன்ற இரட்டைகள் பாதிக்கும். எனவே துயரங்களிலிருந்து மீளவும், நல்வாழ்வு வாழவும் இறைவன் துணை நாடுகிறான். மாறுகின்ற பழக்கங்கள் அவர்களுக்கு உண்டு. மனிதப் பிறவியின் முக்கிய கோட்பாடான துயரங்களைத் துடைத்து என்றும் மாறாத இன்பத்தை - பேரின்பத்தைப் பெற்று உய்ய வேண்டிய விருப்பம் மனிதனுக்கே எழமுடியும். அந்த விருப்பம் அவன் ஆன்மீகச் சாதனைகளைச் செய்வதற்கு வழி செய்யும்.

அதிலே முக்கியமானவை மூன்று மார்க்கங்கள்; பக்தி யோகம், கருமயோகம், ஞானயோகம் ஆகியவையாகும். பக்தி செலுத்த அன்பு ஒன்றே போதும். கருமம் செய்ய ஆற்றல் தேவை. ஞானம் பெற அறிவே வழி. இது மூன்றிற்குமே அடிப்படையாகப் பயில வேண்டியது பக்தியோகமே. இதனைப் பற்றி மேலும் தொடர்ந்து சிந்திப்போம்.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*

ஸ்ரீசேஷாத்ரி சிவனார் அருளிய

# நா நா சீவ வாதக் கட்டளை (தொடர்ச்சி)

**உரை விளக்கம் : சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

## நூல்

ஆறு தத்துவங்களாய் இருக்கின்ற ஸ்தூல சரீரத்திலே, இருபது தத்துவங்களாய் இருக்கின்ற சூக்ஷூம சரீரம் இருக்கின்றது. அஃது எப்படி எனின்:- கர்மேந்திரியங் களுள்வாக்கும், ஞானேந்திரியங்களுள் சிங்ஙவையும், வாயில் இருக்கும். உதான வாயுவும், மனதும் கண்டத்தில் இருக்கும். பிராண வாயும், புத்தியும் இருதயத்தில் இருக்கும். சமான வாயுவும், சித்தமும் நாபியில் இருக்கும். அபான வாயுவும், பாயுருவும் குதத்தில் இருக்கும். வியான வாயுவும், ஞானேந் -திரியங்களுள் துவக்கும், அகங்காரமும் சர்வாங்கமும் வியாபித்திருக்கும். உச்சியிலே உள்ளமும், கருவிழி நுனியிலே சக்ஷூ இந்திரியமும், காதிற்குள்ளே சுரோத்ரேந்திரியமும், மூக்கு நுனியிலே கிராணேந்திரியமும், கழுத்திற்கு மேலே தனித்தனியே இருக்கும். கழுத்திற்குக் கீழே, கை, கால், குய்யங்களில், பாணி, பாதம் உபஸ்தம், மூன்றும் தனித்தனியே இருக்கும். இப்படி ஸ்தூல சரீர தத்துவங்கள் ஆறு, அதில் குடிபுகுந்த சூக்ஷூம சரீர தத்துவங்கள் இருபது; ஆகத் தத்துவங்கள் இருபத்தாறும், பஞ்ச பூதங்களின் காரியம் ஆனபடி-யினாலே ஒருமைப்பாடாகக் காரிய சரீரம் என்று சொல்லப்படும்.

## உரை

தூல தேகம், (பரு உடல்) ஆறு விதமான பொருள்களால் உண்டானது - ஐம்பூதங்களில், ஆகாயம் தவிர்த்து நால்வகைப் பூதங்களும் உடலாக்கத்தில் பங்குடையன - ஆறு பொருள்களைத் தத்துவங்களாகச் சொல்வது வழக்கு. அவை (1) சர்மம் (தோல்) (2) உதிரம் (ரத்தம்) (3) மாமிசம் (சதை) (4) சனாயு (நரம்பு) (5) அத்தி (எலும்பு) (6) மஜ்ஜை (உள்ளுறைக் கொழுப்பு). இந்த ஆறு

பொருள்களால் ஆனதே நம் பருஉடல். ஆறு தத்துவங்களால் ஆன உடலில் முன்னர்க் கூறிய சூட்சும உடலின் (நுண் உடல்) இருபது தத்துவங்களும் இடம் பெற்றுச் செயலாற்றுகின்றன.

நுண் உடலின் இருபது தத்துவங்களாவன: ஐந்து ஞானேந்திரியம், ஐந்து கர்மேந்திரியம், ஐந்து அந்தக்கரணங்கள், ஐந்து வாயுக்கள் ஆகியவை ஆகும். மனிதப் பருவுடலில் கர்மேந்திரியங்களில் வாக்கு வாயிலும், (சிங்குவை) ருசிக்கும் சக்தியாகிய ஞானேந்திரியம் நாக்கிலும் ஆக இரண்டும் வாயில் அமைந்திருக்கும். மனமும் உதானவாயுவும் (உண்ட உணவைக் கடைந்து ஜீரணிக்க உதவும் வாயு) மனிதனின் கண்டத்தில் (கழுத்துப் பகுதியில்) இருக்கும். பிராண வாயுவும் புத்தியும் இருதயத்தில் இருக்கும். உணவு செரிக்க உதவும் சமான வாயுவும் சித்தமும் நாசியில் அமைந்திருக்கும். மலம்நீர் முதலியவற்றை வெளியேற்றும் அபான வாயுவும் பாயுருவும் குதத்தில் இருக்கும். வியான வாயுவுடன் ஞானேந்திரியங்களில் ஒன்றான தொடு உணர்வும் (துவக்கு) அகங்காரமும் உடல் எங்கும் பரவி ஆட்சி செய்யும்.

தலை உச்சியிலே உள்ளம் - கருவிழி நுனியிலே பார்க்கும் சக்தி (சக்ஷு)
காதிற்குள்ளே கேட்கும் கருவி (சுரேந்திரியம்)
மூக்கு நுனியிலே நுகரும் கருவி (கிராணேந்திரியம்)
ஆகியவை கழுத்திற்கு மேலே தனித்தனியாக வேறு வேறு உடல் உறுப்புகளில் அமைந்து பணி செய்யும்.
கழுத்திற்குக் கீழே
கையில் - பாணி (முன் பின்னாக - மேல் கீழாக அசைந்து பணி செய்யும் சக்தி)
காலில் நடக்கும் சக்தியான பாதம் அமைந்து பணி செய்யும்.
குய்யத்தில் (ஆண் / பெண் உறுப்பு) இன்பம் தரக்கூடிய சக்தி (உபஸ்தம்) அமைந்து பணி செய்யும்.

இங்ஙனம் ஆறு நுண்பொருள்களால் - ஆக்கப்பட்ட பரு உடலில் உள்ள வெவ்வேறு உறுப்புகளில் குடிகொண்டு சூட்சும உடலின் இருபது

(தத்துவங்களும்) பல விதமான பணிகளைச் செய்யும். இவ்வாறு மனித வாழ்க்கைக்குத் தேவையான உடல் உறுப்புகள் கூடிய பருஉடலுடன் கூடி இருபது நுண் உடற்கருவிகள் இயங்கி மனிதனைச் சக்தி படைத்தவனாக வாழச் செய்கின்றன. இவை அனைத்தும் ஐம்பூதங்களின் காரியம். ஆகையால் - இவற்றைச் செய்கின்ற உடல் காரிய சரீரம் என்று சொல்லப்படும்.

## நூல்

**அவித்தையில் பிரதிபிம்பித்த சிதர்பாசன், சாக்கிரத்திலே இந்த இருபத்தாறு தத்துவங்களுடனே கலந்து நின்றபோது, விசுவன் என்றும், வியாவகாரிக சீவன் என்றும் சொல்லப்படுவன். சொப்பனத்திலே, ஸ்தூல சரீரத்தைவிட்டு, அந்தக் கரணத்துடனே கூடி நின்ற போது, தைஜசன் என்றும், பிராதிபாசிகசீவன் என்றும், சொப்பன கற்பிதன் என்றும் சொல்லப்படுவன். சுழுத்தியிலே, காரிய சரீர தத்துவங்கள் இருபத்தாறையும் கைவிட்டுக் காரண சரீரத்தை மாத்திரம் பொருந்தியிருக்கும்போது, பிராக்ஞன் என்றும், பாரமார்த்திகசீவன் என்றும் சொல்லப்படுவன். பிரம சைதன்னியமும், சாக்கிரத்திற்குச் சாட்சியாய் இருக்கும்போது, சீவாத்மா என்றும், சொப்பனத்திற்குச் சாட்சியாய் இருக்கும்போது, அந்தராத்மா என்றும் சுழுத்திக்குச் சாட்சியாய் இருக்கும்போது பரமாத்மா என்றும் அவத்தாத்திரய சாட்சியாய் இருக்கும்போது, ஞானாத்மா என்றும், கூடஸ்தன் என்றும் சொல்லப்படும். இப்படிச் சீவனுக்கு மூன்று சரீரங்களும், மூன்று அவத்தைகளும் சொல்லப்பட்டன.**

## உரை

அவித்தையின் காரணமாக இவ்வுலகில் தோன்றிய அனைத்து சீவர்களும், (சாக்கிரதம்) நினைவுநிலை, (சொப்பனம்) கனவுநிலை (சுழுத்தி நிலை) கனவுகளற்ற ஆழ் உறக்கநிலை, அதற்கும் மேலாகத்

துரியம் சலனங்கள் நீங்கிய நிலை என்ற நால்வகை நிலைகளை அனுபவிப்பார்கள். இவற்றை அவத்தைகள் எனச் சொல்லும் வேதாந்த நூல்கள். விழிப்பு நிலையில் உள்ள சீவன் இந்த இருபத்தாறு தத்துவங்கலைக் கொண்டு செயலாற்றிக் கொண்டு இருப்பான். அப்போது அவன் வியாவகாரிக சீவன் என்றும் விசுவன் என்றும் அழைக்கப்படுவான்.

சொப்பன நிலையில் இந்த இருபத்தாறு கருவிகளும் (தத்துவங்கள்) செயல்படாமல் - பருஉடலை இயக்கும் கருவிகளை ஒதுக்கி, அந்தக்கரணம் ஐந்தும் மட்டும் செயல்படுகின்ற காலத்தில் தைஜசன் (ஒளி பொருந்தியவன்) என்றும் பிராதிபாசிக சீவன் என்றும் சொப்பன கற்பிதன் என்றும் அழைக்கப்படுவான்.

பருவுடற்குரிய இருபத்தாறு கருவிகள் / தத்துவங்களும் - இவற்றை விட்டு காரணசரீரம் மட்டுமே - செயல்படக்கூடிய சுழுத்தியிலே பிராக்ஞன் - பாமார்த்திக சீவன் என்றும் அழைக்கப்படுவான். சுழுத்தியிலே சிந்தனை - செயல் ஏதும் இயங்காது. உயிர் மட்டும் இயங்கிக் கொண்டிருக்கும்; அது பரமனுடன் நெருங்கிய நிலை.

உயிருணர்வும் (பிரம்மனசதன்யமும்) நினைவு நிலையில் கூடி உள்ளபோது சீவாத்மா என்றும் கனவு நிலையில் கூடியுள்ள போது அந்தராத்மா என்றும் சுழுத்திக்குச் சாட்சியாய் அமைந்திருக்கும் போது பரமாத்மா என்றும், துரியம் என்ற உயர்வு கடந்த நிலையாக (அவத்தாத்திரியம்) சாட்சியாக உள்ளபோது ஞானாத்மா என்றும் அழைக்கப்படுவார்கள். துரியம் என்ற நிலை சலனங்கள் அற்றநிலை, அவத்தைகள் நீங்கிய நிலை. செயல்கள் அடங்கிய நிலை. இந்நிலையில் சீவன் ஞானாத்மா என்று அழைக்கப்படுவான். இந்நிலைதான் கூடஸ்தன் என்று சொல்லப்படும். (பாதிப்புக்கள், மாற்றங்கள் ஏற்படுத்த முடியாத நிலை).

இவ்வாறு சீவனுக்கு மூன்று விதமான - (தூலம், சூட்சுமம், காரண சரீரங்கள்) சரீரங்களும் மூன்று விதமான அவத்தைகளும் (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி) கூறப்பட்டன.

| வ. எண் | அவத்தை | சரீரம் | தத்துவம் | பெயர் | தொழில் |
|---|---|---|---|---|---|
| 1. | சாக்கிரம் | தூல / சூக்குமம் | 26 தத்துவங்கள் | விசுவன் | வியவ காரியம் |
| 2. | சொப்பனம் | சூட்சுமம் | 20 தத்துவங்கள் (குறிப்பாக 5) | தைஜசன் | பிராதிபாதி சிவன் |
| 3. | சுழுத்தி | காரணம் | 1 தத்துவம் | பிராக்ஞன் | பரமந்திரி சிவன் |

*தொடரும்....*

# மடாலய நிகழ்வுகள்

18.3.2014 அன்று கோட்டையூர் பெ.ராம. அண்ணாமலை ஐயா குருபூசையும் 20.3.2014 அன்று சண்முகநாதபுரம் முத்தையா சுவாமிகள் குருபூசையும் நடைபெற்றன.

22.3.2014 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சி சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் முன்னிலையில் நிகழ்ந்தது. காப்பியக் கவிஞர் நா. மீனவன் விழாவிற்கு வந்திருந்த அனைவரையும் வரவேற்றார். புலவர் ஆறு. மெ. மெய்யாண்டவர், அமர்நீதி நாயனார் குறித்து இசைப்பேருரை ஆற்றினார். பேராசிரியர் ம. கார்மேகம் நன்றிகூறினார்.

5.4.2014 அன்று அண்ணாமலை ஐயா குருபூசை மிகச்சிறப்பாக நடைபெற்றது. 13.4.2014 அன்று கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவர் குருபூசை நிகழ்ந்தது. அன்பர்கள் பலர் திரளாகக் கலந்துகொண்டு குருவருளும் திருவருளும் பெற்றுச் சென்றனர்.

## சேக்கிழார் போற்றும் பெண்ணின் பெருமை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

## அப்பூதி அடிகள் வரலாறு

காணாமலே காதல் என்பது திரைப்படங்களில் மட்டுமல்ல பெரியபுராணத்திலும் இருக்கிறது.

"ஆண்டசீர் அரசின் பாதம் அடைந்தவர் அறியா முன்னே
காண்தகு காதல் கூரக்கலந்த அன்பினராய்"

திங்களூரில் அப்பூதி என்னும் அந்தணர் திருநாவுக்கரச நாயனாரைக் காணுமுன்பே திருநாவுக்கரசர் புகழ்கேட்டு அவர் மீது பக்தி மீதூர அவர்தம் அன்பர் ஆனார். தாம் செய்யும் நல்லறங்கள், தன் மக்கள் மனை மாடு செல்வம் அனைத்தையும் அவர்க்கே அர்ப்பணித்து அவர் பெயராலேயே அறங்கள் செய்து வருகிறார். அப்பொழுது வழிப் போக்கராக வந்த நாவுக்கரசர் இவர் திறனைக் கண்டும் கேட்டும் இவரைக் காண வருகிறார்.

இந்தச் சந்திப்பைச் சேக்கிழார் காட்டுகிற அழகே அழகு. அப்பர் தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும் நாயகன் சேவடி தைவருஞ் சிந்தையும் நைந்துருகிப் பாய்வது போல் அன்பு நீர் பொழி கண்ணும் ஆக வந்து அப்பூதி அடிகள் இல்லத்தின் வாசலில் நிற்கிறார்.

யாரோ சிவன் அடியார் நம் வாசல் நண்ணி வந்துள்ளார் எனக்கேட்டு முடிவு இல் தவஞ் செய்தேன் கொல் முன் பொழியும் கருணை புரி, வடிவுடையீர் என் மனையில் வந்தருளிற்று என ஓடி வந்து வரவேற்கிறார்.

வந்தவரோ நீர் செய்கின்ற அறங்கட்கு நும் பேர் எழுதாதே வேறு ஒரு பேர் முன் எழுதக் காரணம் ஏன் ? என்று கேட்க வந்ததே கோபம் அப்பூதிக்கு. வேறு ஒரு பெயர் என்ற சொற்கள் நாராசமாகக் காதில் விழுந்திருக்கிறது. இன்றைய மொழியில் சொன்னால் பிலு பிலுவென்று பிடித்துக் கொள்கிறார்.

எது அய்யா வேறு ஒரு பெயர்? சமணர்களுடன்சேர்ந்து மன்னன் சூழ்ச்சியை எல்லாம் தம் தொண்டின் சிறப்பாலே வென்றவர் பெயரா? கல் மிதப்பில் கரையேறி வந்தேறியவர் பெயரா வேறு ஒரு பெயர்? நம்மை எல்லாம் ஆளும் இறைவற்குச் செய் தொண்டாலே இம்மையிலும் செம்மையுற்றுத் தேற எம் போன்றோர்க்கு வழிகாட்டும் நாவுக்கரசர் பெயரா வேறு ஒரு பெயர்? இத்துணை புனிதமான உருத்தாங்கியுள்ள தாங்கள் பேசும் பேச்சா இது? தாங்கள் யார்! எங்குள்ளவர் என்று படபடக்கிறார். அரசோ நீர் சொல்லும் பெருமைக்கெல்லாம் உடையவன் நான் தான் என்று சொல்லவில்லை. தான் செய்த பிழையால் ஏற்பட்ட வடுவை முன்னிறுத்தி ..............
"பிறதுறையில் நின்று ஏற அருளு பெருஞ் சூலையினால் ஆட்கொள்ள அடைந்துய்ந்த எதிலும் உணர்வில்லாச்சிறுமையேன் யான்" என்றார். எவ்வளவு பணிவு. அகங்காரம் அழிந்தால் அருள்கிட்டும் என்பார்கள். எதிரே இருப்பவர் தன்னை வானிற் தூக்கி வைத்த போதும் தான் பள்ளத்திற் கிடந்து ஈசன் அருளால் மேல் ஏறியதை நினைவு கூறுதல் எத்துணை எளிமை ! எவ்வளவு தெளிவு வேண்டும் ! இது தான் அப்பர் அனேக அப்பூதிகளைப் பெறவைத்த மாண்பு!

இதைக் கேட்டதும் அப்பூதிகளுக்கு எப்படி இருந்திருக்கும்; தலை கால் புரியவில்லை. சோற்றுக்கில்லாதவர் கோடிப் பொன் பெற்றதுபோல் கூத்தாடுகிறார். வாய்குழற விழுந்து வணங்கி நாவரசர் வரவை குடும்பத்தார்க்கும் சுற்றத்தார்க்கும் கூவிக்கூவித் தெரிவிக்கிறார். ஊரே திருவிழாக் கோலம் பூணுகிறது. தமது இல்லத்தில் அமுது செய்யப் பணிவோடு வேண்டுகிறார். பாதமலர் துலக்கி வணங்கி ஆசனத்தமர்த்திய பின் விருந்துச் சமையல் தொடங்குகிறது.

தன் மகன் மூத்த திருநாவுக்கரசை வாழைக்குறுத்து நறுக்கத் தோட்டம் அனுப்புகிறார் நாயகி. அவனுக்கு ஒரே மகிழ்ச்சி. நல்ல தாய் தந்தை ஏவ நான் இது செய்யப்பெற்றேன் என்று தோட்டத்தில் பாம்பு தீண்டி நஞ்சு தலைக்கேறுங்காலும் மாதவர்க்கு அன்னம் பாலித்தல் தன்னால் தாமதப்படக் கூடாது என்று ஓடி வருகிறான். தரையில் சாய்ந்து விழும் தனையனைக் கண்ட தாய் கூட, சாகப் போகிறவனைக் கவனியாது தொண்டர் அமுது செய்வதற்குச் சூழ்வார் என்கிறார்.

அற இது தெரியாவண்ணம் அமுது செய்விப்போம் என்றுதான் விரைகிறார்.

என்ன பக்தி! கடமை உணர்வு! குடும்பம் முழுக்க ஒரே சிந்தனை. பல அற்புதங்கலை இறையருளால் நடத்திக் காட்டியவர் வந்திருக்கிறார். வந்திருப்பவர் தெரியாத அடியவர் இல்லை. பெரிய மகான். இறையருளை வைத்து அவர்க்கு அன்னம் பாலிக்கத் தாமதமாகக் கூடாது என்று விரைகிறார்களே! நாம் என்றால் என்ன செய்திருப்போம்! சற்றே சிந்தித்துப் பாருங்கள். ஏன் அவர்கள் நாயன்மார்கள் எனப் போற்றப்படுகிறார்கள் - வித்தியாசம் புரியும். நாம் அவர் பாதமலர்களைப்பற்றி, பிள்ளையைப் பிழைக்கச் செய்யுங்கள் என்று தானே வருந்தி வேண்டியிருப்போம்.

ஆனால் ஏற்றுக்கொள்ளப்பட்ட தொண்டில் சற்றும் சறுக்கலோ விலகலோ ஏற்பட உண்மைத் தொண்டர்கள் சம்மதிப்பதில்லை. இதுதான் அனைத்து நாயன்மார்களின் சிறப்பியல்பு.

நாயனார் ஏற்றுக்கொண்ட தொண்டிலே அவருடைய குடும்பம், சுற்றம். ஏவலர் கூடத் தம்மை முழுமையாக ஆட்படுத்திக் கொண்டிருக்கிறார்கள். நாயனார் தன் மனைவியையோ மகனையோ கட்டாயப்படுத்தவில்லை. அவர்களும் தொண்டில் தம் பங்களிப்பைத் தருவதைத் தலையாய பேறாகத்தான் கருதினார்கள்.

அமுது செய்ய எங்குடிமுழுது உய்யக் கொள்வீர்

என்று வாக்கின் வேந்தரை வேண்ட அவரும் பின்னாலே குடி முழுதும் உய்வு பெறச் செய்கிறார் என்பது இயல்பாக நடந்த ஒன்று.

நாயனார் குடும்பத்தாரைப் பொறுத்தமட்டில் - வாராத விருந்தினர் தம் குலதெய்வம் - வீடு தேடி வந்திருக்கும் போது வேறு எதுவும் முக்கியம் இல்லை. நாட்டம் இல்லை. குறிக்கோள் ஒன்றே! அதனை நிறைவேற்றுதலே குடும்பப் பொறுப்பு. எல்லோரும் கூடி நிறைவேற்றுகிறார்கள்.

அந்தத் தொண்டின் உறைப்பே அவர்க்கு உயர்வு !

## மகாத்மா காந்தி படம் (சென்ற இதழ்த் தொடர்ச்சி)

## ஏ.கே. செட்டியார் (1911 - 1983)

ஆனாலும் தென் ஆப்பிரிக்காவிலும் இன்பகரமான அனுபவங்கள் இல்லாமலில்லை. காந்தி என்பது ஒரு மந்திரச் சொல்லாக விளங்கிற்று. அதுதான் உண்மையான அநுமதிச் சீட்டு ! காந்திஜி ஆரம்பித்த பீனிக்ஸ் குடியேற்றம் இன்னுமிருக்கிறது. காந்திஜியுடன் தோளோடு தோள் நின்று உழைத்த பல ஊழியர்களையும், சகபாடிகளையும் சந்தித்தேன். முதல் சத்யாக்ரகப் போராட்டத்தைப் பற்றி அவர்கள் சொல்லிய அருமையான சம்பவங்கள் என் மனதை விட்டு ஒரு நாளும் அகலாது.

ஸ்ரீ காலன்பாக் என்ற ஐரோப்பிய சிற்பி, காந்திஜியின் தோழர். ஜோகன்னஸ்பர்க்கில் நிரந்தரமாக வசிக்கும் அவர் டால்ஸ்டாய் பண்ணை போன்ற தூரமான இடங்களுக்கு, காமிராவைத் தாமே தோளில் தூக்கிக்கொண்டு வந்தார் ! காந்திஜியிடம் அவர் கொண்டிருந்த அன்பு எத்தகையது !

நான் ஜோகன்னஸ்பர்க்கில் இருந்தபோது யுத்தம் தொடங்கிவிட்டது. கப்பல் கம்பெனிகள் எல்லாம் "இடமில்லை" என்று கையை விரித்தன. ஒரு கம்பெனியார் இந்தியர்களை முதலாவது வகுப்பில் அனுமதிப்பதில்லை என்று கூடக் கூறினர் ; உடனே என்னுடைய உரிமையைப் பற்றிப் போராட ஆரம்பித்தேன். இந்திய அரசாங்கத்தின் ஏஜெண்டு ஜெனரல், வர்த்தக சங்கம் இவர்களின் உதவியைக் கொண்டு; நான் வெற்றி பெற்றேன். தாய்நாடு திரும்ப டிக்கட் கிடைத்தது.

இந்தியாவிற்கு வந்த பின்னரும் தேசத்தைச் சுற்றி மீண்டும் படங்களுக்காக அலைய ஆரம்பித்தேன். டாகுமெண்டரி பிலிம்ஸ் காமிராக்காரர்கள் பல்வேறு சமயங்களில் மாதக் கணக்காக வார்தாவில் காத்துக்கொண்டிருந்தனர். மகாத்மா காந்தியைப் படம் பிடிப்பது மிகவும் கஷ்டமான காரியம். காமிராவுக்காக அவர் சிறிதுவட நிற்பதில்லை.

சாதாரணமாக அவர் மிகவும் வேகமாக நடப்பவர். அதையும் விட அவரைச் சுற்றிலும் எப்பொழுது பார்த்தாலும் ஜனங்கள் நின்று கொண்டு, படத்தில் தாங்களும் விழ வேண்டுமென்று தலையை நீட்டுகின்றனர். காந்திஜியின் வீட்டுக்கு அநேக காமிராக்காரர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. இத்தகைய மகத்தான கஷ்டங்களுக்கு இடையே காந்திஜியின் வாழ்க்கையில் அருமையான சில காட்சிகள் எடுக்கப்பட்டிருக்கின்றன.

மொத்தம் எடுக்கப்பட்ட சுமார் 50,000 அடி நீளமுள்ள படங்களிலிருந்து, சுமார் 12,000 அடி நீளமுள்ள ஒரு தொடர்ச்சியான படம் தயாரித்து இருக்கிறோம். படத்தை இத்தகைய நீளத்திற்குக் கொண்டுவரச் சுமார் 3 வருஷங்கள் ஆயிற்று. இவைகளைச் சேகரிக்க நான்கு கண்டங்களில் ஏறக்குறைய லட்சம் மைல் பிரயாணம் செய்திருக்கிறேன். உலகம் முழுமையிலும், கடந்த 30 வருஷங்களாக, சற்றேறக்குறைய 100 காமிராக்காரர்கள் எடுத்த படங்களின் சேகரிப்பு அது. செய்திப்பட சம்பிரதாயத்தைக் கொண்டு ஒரு தனிப்பட்ட மனிதரின் வாழ்க்கையை, அவரது வாழ்க்கையின் மூலமாகச் சித்திரிக்கும் ஒரு முழுநீளமுள்ள சரித்திரப்படம், முதன் முதலாகத் தயாரிக்கப்படுவது இதுதான் என்பது என் நம்பிக்கை. ஒரு மனிதரைப் பற்றிய முழுநீளப் படம் தயாரிக்க வேண்டுமென்றால், இந்தியாவில் காந்திஜியைத் தவிர வேறு எவரைப் பற்றித் தயாரிக்க முடியும் ?

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### திருநாட்டுப் படலம்

உரவு மாதவர் உளத்தமர் நெல்லைமா துடனே
இரவு சேர்களத்(து) எம்பிரான் கொற்றவாள் ஈசன்
விரவு தெய்வவான் கழனிமுன் பல்தவம் மேவிப்
பரவும் மேன்மைசால் பாண்டிநாட்(டு) அணிசில பகர்வாம். 1

மாறு கொண்(டு)எழு திரையுடைக் குமரியும அடங்கா
வீறு கொண்(டு)இரு கரைஇறப் பெருகுவெள் ஆறும்
கூறு தென்திசை வடதிசை எல்லையாக் கொண்டு
நாறு மேன்மையில் பொலிவது பாண்டிநன் நாடு. 2

ஒன்று தம்பிரான் ஒளிர்தரு கொற்றவாள் ஈசன்
என்று கூறுதற்(கு) இயைதர ஆலவாய் எய்தித்
தொன்று மன்னன்ஆய் செய்யகோல் நடாத்திடத் துகள்தீர்
நன்று சான்றது நாம்புகழ் பாண்டிநல் நாடு. 3

சொல்ல நீடிய விளையுளும் துகள்அறு கலைகள்
பல்ல ஆய்ந்(து)அமைந்(து) அவிர்தரு பண்புமிக் காரும்
மல்லல் மேவிய தாழ்வினைச் செல்வரும் மலிந்து
நல்ல வான்புகழ் படைத்தது பாண்டிநல் நாடு. 4

மகர வாரிதி எல்லைஆ(று) இரண்டொடு மருவிப்
பகரம் ஆயது மதுரைசூழ் எயில்பயில் புள்ளி
நிகர்இல் தன்இயற் பெயர்முதல் வரைந்(து)என நிலவும்
புகரின் மாவளம் பொலிதரு பாண்டிநல் நாடு. 5

விருப்ப வெள்ளிமால் வரைஉருக் கொண்டுவிண் படர்ந்து
சுருப்(பு)அ வாமலர் குழல்சூழ் தொடுகடல் புகுந்து
கருப்பம் ஆர்புனல்உண்டுகார் இந்திர நீலப்
பருப்ப தத்(து)உருக் கொண்டுமீண் டனபடர் கொண்மூ. 6

வலிய வீரபாண் டியனொடு வாதுசெய் மாயப்
புலிமு ழங்கிய(து) எனமுழக்(கு) எழுப்பிமேல் பொங்கார்
கலிவி டம்கொள்கண் டத்தினோன் கொடுத்தாவாள் கைக்கொண்(டு)
ஒலிவி ளங்கஅவன் விதிர்த்து என ஒளிர்தர மின்னி. 7

பிறங்கு மாதவத்(து) உயரிய முனிமதுப் பிரியற்(கு)
அறம்கு லாவிய நெல்லைநா யகியொடு மந்தி
நிறம்கு லாவிய தம்பிரான் நேர்நின்ற(து) என்ன
வறம்கு லாவுகோ டைக்(கு)உற(வு) இல்லென்று வயக்கி 8

எண்இல் அண்டத்து மேவிய மாயவர் எல்லாம்
புண்ணி யத்திரு மலயமால் வரைப்பிரான் பொன்தாள்
நண்ணி ஏத்திடப் புகுந்(து)என நாடும்அம் மலையை
உள்நி லாவிய விருப்பொடும் ஒல்லையிற் சார்ந்து 9

சென்ற மாயவர் தீபஆராதனை செய்து
நன்(று)அவாம்துதி முழக்குபு பணிதரு கலம்போல்
வென்ற வேனில்போய்ப் பின்னிட மின்ஒளி விரிந்தாங்(கு)
ஒன்ற மாமுழக்(கு) எழுப்பின படிந்தன ஒருங்கே. 10

தோற்ற வாம்அமர் ஆலவாய் மேற்பினும் தொடங்கற்(கு)
ஆற்ற வீரைவாய் மடுத்(து)அய ராஎறுழ் அமைந்து
தேற்ற மீதுசாய் தரச்செவியின் வாகைஎன்(று) அதிர்ந்து
போற்ற அவாஉறப் பொழிந்தெனப் பொழிந்தன மழையே 11

வரைஇ டம்தொறும் பொழிந்தன வளம்மலி தளவத்
தரைஇ டம்தொறும் பொழிந்தன தாமரைப் பழன
நிரைஇ டம்தொறும் பொழிந்தன நெய்தல்என்(று) எடுத்துக்
கரைஇடம் தொறும் பொழிந்தன வெயில்பொழி கதிர்போல். 12

தூய(து) ஆம்பர ஞானமே விடுதலும் தொலைந்து
போய(து) ஆயகார் அவித்தையில் பொழிமழை முகிலால்
ஆய வெள்ளமேல் இடுதலும் அடியறத் தொலைந்து
பாய ஞாலம்விட்(டு) ஒழிந்தது பரந்தவெங் கோடை. 13

ஆன்ற வாயில்சால் உடல்களை யப்படும் ஆன்மாச்
சான்ற ஞானத்தால் காணுமே யாவும்தன் மயமா
ஏன்ற வாய்க்கிண(று) ஆதியுள் படுபுனல் எழிலி
கான்ற நீரினால் யாவும்தான் ஆகக்கண்(டு) அன்றே. 14

பொருஇல் சச்சிதா நந்தவான் பிரமம்ஓர் பொருட்(டு)ஓர்
உருவு எடுத்துமீ எவும்தன(து) இயல்பினை உறல்போல்
மருவு வெண்புனல் மங்குலாற்(று) இரண்டுமண் வீழ்ந்து
கருதும் ஆலிஎன் பெயர்தபக் கரைந்தது மீட்டும் 15

புரவு நீர்வரை கான்பணை நெய்தலின் புடையுள்
உரவு நாமரூ பம்குணம் வேறுபட்(டு) ஒளிர்தல்
பரவு சோதிதான் ஆய்இருந் தால்எனும் பாட்டில்
விரவு வான்பொருள் சுவையினை வெளிப்பட விளக்கும். 16

மழைஎ னப்படும் தேசிகன் திங்கள்மும் மழையாம்
விழையும் முப்பதப் பொருளினை விருப்பொடு பொழியக்
குழைத ரப்படு கோடையாம் அவித்தைபோய்க் குலைந்து
தழைஉ யிர்ப்பயிர் தன்இயல்(பு) அடைந்தன மாதோ 17

பாய மேகம்என்(று) உரைக்கும்ஆ சாரியன் படர்வெற்(பு)
ஆய ஆதனத்(து) ஏறிவே தாந்தத்தின் அமைந்த
தூய வான்பொருள் பெருமழை பொழிதலும் தொடர்ந்து
மேய மாயையால் கானல்கெட்(டு) ஒழிந்தது விரைந்தே. 18

விரும்பு தெய்வவே தாந்தஆ ராய்ச்சிமே லிடலும்
அரும்பு பல்மதக் கோள்எலாம் அகன்(று)என எழிலி
தரும்பு னல்பெரு வெள்ளமே லிடுதலும் தரைமேல்
சுரும்பு மொய்த்தபூ ஓடைகான் முதற்பெயர் தொலைந்த 19

வெல்லும் மாமழைப் பெருவளம் முழுவதும் விளங்கச்
சொல்லும் வல்லவர் யாவரே மதிக்குலத் தோன்றற்(கு)
ஒல்லும் வான்பெரு நாட்டினுள் ஐந்திணை யுள்ளும்
புல்லும் மேன்மைசால் குறிஞ்சியின் வளம்சில புகல்வாம். 20

## குறிஞ்சி (வேறு)

கிளைபல துவன்றப் பட்டும் கெழுமுபொன் மலரப் பட்டும்
வளைதரு பந்தம் இன்றி மருவும்இல் லறத்தார் போலக்
கிளைபல துவன்றப் பட்டும் கெழுமுபொன் மலரப் பட்டும்
வளைதரு சுரும்பர் இன்றி மருவுவ வேங்கை எல்லாம். 21

வசிப்பது வரைக்கண் வேங்கை மான்நெடுந் தோல்அ ரைக்கண்
விசிப்பது நன்மை தீமை என்னும்வேற் றுமைத விர்ந்து
பசிப்பது தீரக் கந்த பலாதியா தானும் நாளும்
புசிப்பது செய்கை என்னில் பொருப்பரும் பெரியர் போலும் 22

நிழல்சுளி களிநல் யானை நிழல்பளிங்(கு) அதனுள் தோன்ற
உழல்சிலை வேடர் வேல்கொண்(டு) ஓச்சுபு நாணா நிற்பர்
கழு(று)அரா அவித்தை யாளர் கற்பித பவஞ்சம் கண்ணுற்(று)
அழல்மெழு காய்ப்பின் உள்தேர்ந்(து) அவாஅற நாணு மாபோல். 23

சலசல வழியா நிற்கும் தயங்குவெள் அருவி ஓர்பால்
கலமுலை அவர்செஞ் சாந்தம் கரைந்(து)இழி அருவி ஓர்பால்
வலன்உயர் களிற்றி யானை மதசல அருவி ஓர்பால்
இலகுமுக் குணமும் மூலப் பகுதிநின்(று) எழுந்தால் என்ன 24

பெயர்வறு பிறங்கல் உற்றுப் பிறங்குவேய்க் குலங்கள் எல்லாம்
மயர்(வு) அறு உயர்ச்சி வாய்ந்து வணக்கமும் அமையப் பூண்டே
அயர்(வு)இல்இன் இசையால் யாரும் யாவும்உள் மகிழ ஆற்றும்
உயர்பெரி யவரை உற்றால் உரைத்தன உரிய கொல்லோ. 25

வெறும்பலா(சு) ஆதி யாய விருக்கமும் சிதல்சு ரும்பர்
எறும்(பு)அலா உயிர்கள் யாவும் இம்மையே இன்பம் எய்த
உறும்பல்ஆ யிரவர் போற்ற உம்பர்நா யகன்வாழ் தெய்வக்
குறும்பலா அமரும் வெற்பும் குறிஞ்சியேல் குறைஒன்(று) உண்டோ.
26

அருள்வலி தெரிப்பான் பூமி அந்தர சுவர்க்கம் காட்டி
இருள்வலி யடைந்த ஆன்மா எவற்றிற்கும் இரியல் போக்கிப்
பொருள்வலி முத்தி இன்பம் புணர்த்துநம் பெருமான் மேயத்
தெருள்வலி மேய குன்றும் சிவணிலியார் தெரிக்க வல்லார். 27

எழுமுதிர் பரிதி நாணும் இலங்(கு)எழில் மேனி வாய்ந்து
தொழுமுதிர் மலங்கள் காட்டித் தொல்வினை அனைத்தும் மாழாந்து
அழும்முதிர் கருணை காட்டி அறுமுகப் பெருமான் மேய
பழமுதிர் சோலை வெற்பும் உள(து)எனில் பகர்தல் என்னே. 28

தேன்அமர் கடப்பந் தாரான் செறிந்தபல் உலகும் உய்ய
வானவர் புனிதன் ஈன்ற கொம்பினை வதுவை செய்து
தான்அமர் பரங்குன்(று) என்னும் தவத்தையும் தன்பால் கொண்ட(து)
ஊன்அமர் பகழி வேடர் உலாவரும் குறிஞ்சி மாதோ. 29

சிறைவலிக் கலுழன் தன்னை விழுங்கிய செயிர்ஒ ழிப்பான்
நிறைவலி மயூரம் பூசை நிகழ்த்திய குன்றும் உண்டேல்
குறைவலி உளதோ அம்ம குறிஞ்சியை யாது சொற்றாம்
மறைவலி அமைந்த கான வளம்சில அணியல் உற்றாம். 30

முல்லை

போற்றிடப் பட்ட கானம் புண்ணிய நிரைமேய்த்(து) ஓம்பல்
ஆற்றிடப் பட்டோர் ஆய அண்டர்தம் உதரத் தீயும்
சாற்றிடப் பட்ட மன்னர் சமர்விளை கோபத் தீயும்
மாற்றிடப்பட்ட வெள்ளை வரகும்செங் கொள்ளும் மல்கும். 31

விரிதரு புவனம் எல்லாம் மெய்என மதித்துச் சென்று
பரிதரும் அவித்தை யாளர் பண்பென வெளியின் ஊடு
திரிதரு கானல் நீரைத் தெளிந்தநீர் என்று நம்பிப்
புரிதரு மகிழ்வி னோடும் உழைக்குலம் பொலிவ ஆங்கண். 32

இறையவன் வாம பாகம் என்றும்மா யவன்தோள் என்றும்
நறைகமழ் கடுக்கை வேணி என்றும்நல் அறுகு வில்வம்
உறைதலில் குடங்கை என்றே உழைக்குலம் அமரும் போலும்
மறைபுகழ் செருத்த லாக்கண் மல்குகார் மாலை முல்லை. 33

பிறர்முயன் றதனால் ஆய உணவுபே ணாது தாமும்
உறமுயன்(று) உண்ணல் செய்யா(து) உணாவயி(று) ஆர உண்டு
மறம்எனல் சிறிதும் இன்றி மண்படாத் தூநீர் உண்டும்
திறம்உற வைகும் என்னின் முயல்திறம் செப்பொ ணாதே. 34

மருவிய தெய்வம் ஒன்று வாழ்தரு பூமி தீமை
ஒருவிய(து) என்னில் தெய்வம் ஒருங்குறுப்பு அமையப் பெற்ற
பொருவியல் தவிர்ப சுக்கள் எண்ணில பொலிய ஆய்ந்த
திருஇயல் கான நீர்மை யாவரே செப்பு நீரார் 35

பரவுதண் புறவம் மூலப் பகுதித் தத்துவமே ஆங்கு
விரவுமுக் குணத்து மூவர் வெளிப்படு மாறு போல
உரவுசேர் பிடாவும் வானம் உரிஞிய எமுப லாசும்
கரவுதீர் தருகா யாவும் மலர்ந்தன கஞலும் மாதோ. 36

பூத்திடு வளத்தி னாலும் பூவைஎன் பெயரி னாலும்
மூத்திடு தன்மை சாலா முகுந்தனே பொருவு மால்என்(று)
ஏத்திடு காயா எல்லாம் எற்றைக்கும் காயா அங்கண்
பார்த்திடும் உரிய காரால் பயன்அடைந் ததுவே(று) இன்றே. 37

தானப்பேர் நகர்ஆள் வேந்தன் தாமரைத் தவிசோன் மாயோன்
ஊனப்பேர்(வு) அரிய துன்பம் ஒழிக்கென உற்றுப் போற்ற
வானப்பேர் சடையான் எங்கள் மலைமகளோடு வைகும்
கானப்பேர் வயங்கும் என்னில் கானப்பேறு எளிய(து) ஆமோ. 38

பரிமுளை இருத்தி மேலோர் மொக்(கு)அணி பரவச் சேர்த்தி
விரிமலர் மாலை சூட்டி விழைந்துகை புனைய ஆங்கே
எரிமருள் நிறத்துப் பெம்மான் எழில்வளம் பொலிய மேவிப்
புரிஅருள் சுரக்கும் என்னில் கான்தவம் புகறற் பாற்றோ. 39

அருள்குறி அருச்சிப் பாருக்(கு) ஆன்ஐந்தோ(டு) அறுகு வில்வம்
மருட்சிஇல் துழாய்கு ருந்து கொன்றைமுன் வயங்கி நாளும்
தெருட்சிசெய் புறவ மேன்மை தெரிந்துஎவன் சொல்தான் சற்றும்
வெருட்சிஇல் வேந்தன் ஆளும் மருதமும் விளம்பல் உற்றாம். 40

(தொடரும்...)

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**